ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# சாந்தி மந்திரங்கள்

தொகுப்பு

சுவாமி பிரபஞ்சநாதன்

# சாந்தி மந்திரங்கள்

எந்த ஒரு காரியத்தை தொடங்கும் பொழுதும் அதற்கான மன நிலையில் இருப்பது மிகவும் அவசியம்.

சாந்தி மந்திரங்கள் நம் பாரத தேசத்தில் வாழ்ந்த பழம்பெரும் ரிஷிகளின் அனுபவத்தில் வெளிப்பட்ட வேதப்பொக்கிசங்கள்.

பொதுவாக, உபநிஷதங்கள், ஸூக்தங்கள், போன்றவைகளைப் படிக்கும் பொழுது, அவைகளின் ஆரம்பத்துலும், இறுதியிலும் இந்த *சாந்தி மந்திரங்கள்* ஓதப்படுகின்றன.

*சாந்தி மந்திரங்கள்* அனைத்தும், இறுதியில் '**ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:**' என்று நிறைவு பெறுவதைக் காணலாம்.

'**சாந்தி**' என்றால் '**அமைதி**' என்று பொருள்.

நம் அன்றாட வாழ்வில் நமக்கு உண்டாகின்ற பல்வேறு துன்பங்களுக்கு மூலம், இங்கு கீழே கூறப்படுகின்ற மூன்று விதமான துன்பங்கள் ஆகும்.

அத்தகைய துன்பங்களிலிருந்து விடுபட்டு, நாம் அமைதியை அடையவே ஓம் சாந்தி சாந்தி சாந்தி என்று மூன்று முறை சொல்லப்படுகிறது.

மூன்று வகை துன்பங்கள் வருமாறு.

1. *ஆத்யாத்மிகம்:* நம்மால் நமக்கு வரும் துன்பம்; உடல் நோய், மனப் பிரச்சினைகள் போன்றவை.

2. *ஆதி பௌதிகம்:* பிற உயிர்களால் நமக்கு வரும் துன்பங்கள்.

3. *ஆதி தைவிகம்:* இயற்கை சக்திகளால் வரும் துன்பம், மழை, இடி, தீ போன்றவற்றால் வருபவை.

மூன்று முறை சாந்தி என்று கூறுவதின் மூலம், இந்த மூவகைத் துன்பங்களிலிருந்தும் முழுமையாக விடுபடுவதற்காகப் பிராத்தனை செய்யப்படுகிறது.

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

******

**(கேன உபநிஷதத்திற்கு இது சாந்தி மந்திரம்)**

*ஓம் ஸஹ நாவவது ஸஹ நௌ புனக்து*
*ஸஹ வீர்யம் கரவா வஹை தேஜஸ்வி நா*
*வதீதமஸ்து மா வித்விஷாவஹை*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

<u>பொருள்:-</u>

ஆச்சாரியர்! சீடர் ஆகிய நம் இருவரையும் இறைவன் காப்பாராக! அறிவின் ஆற்றலை நாம் இருவரும் அனுபவிக்குமாறு ஊக்குவிப்பாராக! நாம் இருவரும் ஈடுபாடுமிக்க ஆற்றலுடன் உழைப்போமாக! கற்றது நமக்குப் பயனுள்ளதாக விளங்கட்டும்! எதற்காகவும் நாம் ஒருவரையொருவர் வெறுக்காமல் இருப்போமாக!

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

******

ॐ

**(தைத்திரீய உபநிஷத்துக்கு இது சாந்தி மந்திரம்)**

*ஓம் சன்னோ மித்ர: சம் வருண: சன்னோ*
*பவத்வர்யமா*
*சன்ன இந்த்ரோ ப்ருஹஸ்பதி:*
*சன்னோ விஷ்ணுருருக்ரம:*
*நமோ ப்ரஹ்மணே நமஸ்தே வாயோ*
*த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி*
*த்வாமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம வதிஷ்யாமி*
*ரிதம் வதிஷ்யாமி ஸத்யம் வதிஷ்யாமி*
*அவதுமாம் அவதுவக்தாரம்*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

**பொருள்:-**

மித்ரன் நமக்கு நன்மை செய்வாராக,
வருணன் நமக்கு நன்மை செய்வாராக,
அர்யமான் நமக்கு நன்மை செய்வாராக,
இந்திரனும் ப்ரஹஸ்பதியும்
நமக்கு நன்மை செய்வார்களாக,
எங்கும் நிறைந்தவரான விஷ்ணு
நமக்கு நன்மை செய்வாராக,
பிரம்மனை வணங்குகிறேன்,
வாயு தேவனே, உன்னை வணங்குகிறேன்,
நீயே கண்கண்ட தெய்வமாக இருக்கிறாய்,
கண்கண்ட தெய்வம் என்று உன்னைப் போற்றுகிறேன்,

ரிதம் என்று போற்றுகிறேன்,
சத்தியம் என்று கூறுகிறேன்,
அந்தப் பரம்பொருள் என்னைக் காப்பாராக,
அவர் ஆசிரியரைக் காப்பாராக;
என்னைக் காப்பாராக, ஆசிரியரைக் காப்பாராக.

மித்ரன் பிராணனுக்கும் பகலுக்கும் அபிமான தேவதை, வருணன் அபானனுக்கும் இரவுக்கும் அபிமான தேவதை, அர்யமான் கண்ணுக்கும் சூரியனுக்கும் அபிமான தேவதை, இந்திரன் கைகளுக்கும் வலிமைக்கும் அபிமான தேவதை, பிருஹஸ்பதி வாக்கிற்கும் புத்திக்கும் அபிமான தேவதை, விஷ்ணு பாதங்களுக்கு அபிமான தேவதை.

ரிதம் என்பது வ்யாவஹாரிக உண்மை.

(*உதாரணம்:-* சூரியன் கிழக்கில் உதித்து மேற்கில் மறைகிறான்),

ஸத்யம் என்பது பாரமார்த்திக உண்மை.

(*உதாரணம்:-* சூரியன் உதிப்பதோ மறைவதோ இல்லை) பிரபஞ்சமும் அதன் இயக்கங்களும் எல்லாமே வ்யாவஹாரிக உண்மை - அதனை இறைவன் பின்னின்று இயக்குகிறான் என்பது பாரமார்த்திக உண்மை.

********

**(முண்டக, மாண்டூக்ய, ப்ரச்ன உபநிஷதங்களுக்கு இது சாந்தி மந்திரம்)**

*ஓம் பத்ரம் கர்ணேபி: ச்ருணுயாம தேவா:*
*பத்ரம் பச்யேமாக்ஷபிர் யஜத்ரா:*
*ஸ்திரை ரங்கைஸ் துஷ்ட்டுவாக்ம் ஸஸ்தனூபி:*
*வ்யசேம தேவஹிதம் யதாயு:*
*ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்த ஸ்ரவா:*
*ஸ்வஸ்தி ந பூஷா விச்வ வேதா:*
*ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்ட்ட நேமி:*
*ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர் ததாது:*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

<u>பொருள்:-</u>

தேவர்களே, காதுகளால் நாங்கள்
நல்ல விஷயங்களைக் கேட்க வேண்டும்,
பூஜிக்கத் தகுந்தவர்களே, கண்களால் நாங்கள்
நல்ல விஷயங்களைக் காண வேண்டும்,
உறுதியான அங்கங்களுடன் கூடிய உடலுடன்
ஆயுள் முழுவதும் உங்களைத் துதிக்க வேண்டும்,
தேவர்களுக்கு நன்மை செய்த வண்ணம் வாழ
வேண்டும்.

பழம்புகழ் பெற்ற இந்திரன் நமக்கு நன்மை செய்யட்டும்,
எல்லாம் அறிகின்ற சூரியன் நமக்கு மங்கலம் செய்யட்டும்,
தீமையை அழிக்கின்ற கருடன் நமக்கு நன்மை செய்யட்டும்,
பிருஹஸ்பதி நமக்கு நன்மை தரட்டும்.

உலகியலில் மூழ்கடிப்பதற்கான விஷயங்களும், உயர் வாழ்க்கையில் தூண்டுகின்ற விஷயங்களும் இரண்டுமே மனிதனின் முன்னால் வருகின்றன. அறிவாளி இரண்டாம் வகையைத் தேர்ந்தெடுக்கிறான்.

- *கட உப நிஷதம்.*

அந்தவகையில் மேலே கூறப்பட்ட சாந்தி மந்திரமும், கீழே தரப்பட்டுள்ள சாந்தி மந்திரங்களும், நல்லவைகளையும், மிகவும் உயர்ந்தவைகளையும் மட்டுமே தேர்ந்தெடுப்பதற்கு, நமது புலன்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கும், தேவர்களின் துணையை நாடுவதற்குமான மந்திரங்கள் ஆகும்.

******

*ஓம் யச்சந்தஸாம்ரிஷபோ விச்வரூப:*
*சந்தோப்யோ(அ)த்யம்ருதாத் ஸம்பபூவ*
*ஸ மேந்த்ரோ மேதயா ஸ்ப்ருணோது*
*அம்ருதஸ்ய தேவ தாரணோ பூயாஸம்*
*சரீரம் மே விசர்ஷணம்*
*ஜிஹ்வா மே மதுமத்தமா*
*கர்ணாப்யாம் பூரி விச்ருவம்*
*ப்ரஹ்மண:கோசோ(அ)ஸி மேதயா பிஹித:*
*ச்ருதம் மே கோபாய*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

**<u>பொருள்:-</u>**

எந்த நாதம் வேதங்களின் மிகச் சிறந்த பகுதியோ,
எல்லாமாக இருக்கிறதோ, அழிவற்றதான
வேதங்களிலிருந்து தோன்றியதோ,
அந்த ஓங்காரம்
எனக்கு அறிவொளியைத் தரட்டும்.
தேவனே, நான் அழிவற்ற பரம்பொருளைப்
பற்றிய அறிவைப் பெறுவேனாக.
எனது உடல் ஆரோக்கியம் உடையதாக
இருக்கட்டும்,
எனது நாக்கு மிகவும்
இனிமையானவற்றைப் பேசட்டும்,

காதுகள் ஏராளமாக
நல்லவற்றைக் கேட்கட்டும்.
ஓங்காரப் பரம்பொருளே,
உலகப் பொருட்களைப்
பற்றிய அறிவால் நீ
மறைக்கப் பட்டுள்ளாய்.
இறைவனின் இருப்பிடம் நீ,
கற்றவற்றை நான்
மறந்துவிடாமல்
காப்பாய்.

******

*ஓம் மதுவாதா ரிதாயதே*
*மதுக்ஷரந்தி ஸிந்தவ:*
*மாத்வீர் நஸ்ஸந்த்வோஷதீ:*
*மது நக்தமுதோஷஸி*
*மதுமத் பார்த்திவக்ம் ரஜ:*
*மது த்யௌரஸ்து ந: பிதா*
*மதுமான் நோ வனஸ்பதிர்*
*மதுமாக்ம் அஸ்து ஸூர்ய:*
*மாத்வீர் காவோ பவந்தி ந:*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

## பொருள்:-

சிறந்த செயலைச் செய்ய விரும்புகின்ற
நமக்கு காற்று இனிமையாக வீசட்டும்,
நதிகள் இனிய நீருடன் ஓடட்டும்,
செடிகொடிகள் வளம் பெற்று
விளங்கட்டும்,
இரவும் பகலும் நன்மையைத் தரட்டும்,
பூமி இனிமையைத் தரட்டும்,
நமது தந்தையான வானம்
இனிமையைப் பொழியட்டும்,
செடிகொடிகளின் அதிபதியான
சந்திரன் இனிமையாக இருக்கட்டும்,
பசுக்கள் அதிக பாலைப் பொழியட்டும்.

******

**(கேன, சாந்தோக்ய உபநிஷதங்களுக்கு இது சாந்தி மந்திரம்)**

*ஓம் ஆப்யாயந்து மமாங்கானி வாக்ப்ராணச் சக்ஷு:*
*ச்ரோத்ரமதோ பலமிந்த்ரியாணி ச ஸர்வாணி*
*ஸர்வம் ப்ரஹ்மௌபநிஷதம் மாஹம்*
*ப்ரஹ்ம நிராகுர்யாம் மா மா*
*ப்ரஹ்ம நிராகரோதனிராகரணமஸ்து*
*அனிராகரணம் மே (அ)ஸ்து*
*ததாத்மனி நிரதே ய உபனிஷத்ஸு தர்மாஸ்தே*
*மயி ஸந்து மயி ஸந்து*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

<u>பொருள்:-</u>

எனது அவயவங்களான, வாக்கு,
பிராணன், கண்கள், காதுகள், மற்றும்
எல்லாப் புலன்களும்
மிகுந்த ஆற்றலுடன் விளங்கட்டும்.
உப நிஷதங்கள் கூறுகின்ற இறைவனே எல்லாம்.
அந்த இறைவனை நான் மறுக்காதிருப்பேனாக,
இறைவனிடமிருந்தும் மறுப்பு இல்லாதிருக்கட்டும்,
என்னிடமிருந்தும் மறுப்பு இல்லாதிருக்கட்டும்,
உபனிஷதங்களில் கூறப்பட்டுள்ள தர்மங்கள்
ஆன்மாவை நாடுகின்ற என்னில்
குடிகொள்ளட்டும்.

## *ரிக் வேதத்திலிருக்கும் ஆநோபத்ரா சூக்தத்தின் தமிழ் வடிவம்*

தீமை கலவாத, தடையற்ற, தடைகளை உடைக்க வல்ல, மங்கலமான எண்ணங்கள் எல்லாத் திசைகளிலிருந்தும் நம்மை வந்து சேரட்டும். பக்தர்களைக் கைவிடாதவர்களான தேவர்கள் எப்போதும் நமக்கு இன்பத்தை வளர்ப்பவர்களாக, நம்மைக் காப்பாற்றுபவர்களாக இருக்கட்டும்.

மங்கலமயமான தேவர்களின் நல்லாசிகள் நம்மீது நிலவட்டும். அவர்களின் வரங்கள் நமக்குப் பெருகட்டும். அவர்களின் நட்பு நமக்குக் கிடைக்கட்டும். இங்கே நாம் நீண்ட காலம் வாழ்வதற்கான ஆயுளை அவர்கள் நமக்குத் தரட்டும்.

ஆதித்தனை, சூரியனை, பூமிதேவியை, தலைவரான தட்சப்பிரஜா பதியை, பித்ருக்களின் தலைவரான அர்யமணனை, வருணனை, சந்திரனை, அசுவினி தேவர்களை, கலைமகளை முறையான ஆஹுதிகளுடன் வழிபடுவோம், அவர்கள் நமக்கு நன்மையைத் தரட்டும்., இன்பத்தைத் தரட்டும்.

காற்றும் அன்னை பூமியும், தந்தை வானமும் ஆனந்தம் தருவதான மருந்தை அனுப்பட்டும். ஆனந்தம் தருவதான மருந்தைத் தயாரிப்பதற்கான

கற்களை சோமனின் மகனான புதன் நமக்கு அனுப்பட்டும், இரட்டையரான அசுவினி சகோதரர்கள் நமது புத்தியில் ஒளியை நிறைக்கட்டும்.

உயிருள்ளவை உயிரற்றவை அனைத்திற்கும் தலைவரும், நமது புத்தியை விழிப்படையச் செய்பவருமான அந்த மேலான இறைவனை நாங்கள் தியானிக்கிறோம். அந்த ஒளிக்கடவுள் எங்கள் செல்வத்தை அதிகப் படுத்துவாராக; தவறாமல் எங்களைக் காப்பாற்றுவாராக.

பெரும்புகழ் படைத்த இந்திரன் நமக்கு மங்கலம் நல்கட்டும். எல்லாம் அறிந்தவரான சூரிய பகவான் நமக்கு மங்கலம் தரட்டும். தீமையை அழிப்பவரான கருடன் நமக்கு மங்கலம் செய்யட்டும். தேவகுருவான பிருஹஸ்பதி நமக்கு நன்மையைத் தரட்டும்.

புள்ளிக் குதிரையில் சவாரி செய்பவனும், பூமித் தாயின் பிள்ளையும், அறிஞர்களுக்கு நிறைந்த தன்மையைத் தருபவனும், தீச்சுடர் போல் கூர்மையானவனும் சூரியனைப்போல் ஒளிர்பவனும், விஸ்வேதேவர் களுள் ஒருவனுமான வாயுதேவன் நம்மைக் காப்பதற்காக இங்கே வரட்டும்.

தேவர்களே! காதுகளால் நல்ல விஷயங்களைக் கேட்க வேண்டும். பூஜிக்கத் தகுந்தவர்களே, கண்களால் நல்ல விஷயங்களைக் காண வேண்டும். உறுதியான அங்கங்களுடன் கூடிய உடலுடன் ஆயுள் முழுவதும் உங்களைத் துதிக்க வேண்டும். உங்களுக்கு நன்மை செய்யும் வண்ணம் நாங்கள் வாழவேண்டும்.

தேவர்களே, நூறு சரத்காலங்கள் எங்கள் முன்னே உள்ளன. அந்தக் காலத்தில் எங்கள் உடல் மூப்படைந்து விடும். அப்போது எங்கள் பிள்ளைகள் தந்தையர் ஆகிவிடுவார்கள். எங்கள் ஆயுளை முழுமையாக முடிவதற்குமுன் தடுத்து விடாதீர்கள்.

அதிதியே வானம், அதிதியே விண்ணொளி, அதிதியே அன்னை, அவளே தந்தை, அவளே மகன், அதிதியே எல்லாத் தேவர்களும் எல்லா மனிதர்களும். பிறந்தவை, பிறக்கப் போகின்றவை எல்லாமும் அவளே.

*(இந்தப்பாடல் தேவியைப் போற்றுவதாக அமைந்துள்ளது. அதிதி என்ற சொல் எல்லையற்றது, குறைவற்றது என்று பொருள்படுகிறது.)*

## (ஸம்வனன சூக்தத்தின் தமிழ்வடிவம்)

ரிக்வேதத்திலிருக்கும் கடைசி பாடலான **ஸம்வனன சூக்தம்** சமுதாயம் வளம்பெற பொதுவான சங்கல்பத்தைக் கூறுகிறது.

நன்மை பொழிகின்ற தெய்வமாகிய அக்கினித் தேவனே, எல்லா உயிரினங்களையும் ஒற்றுமையாக இருக்கச் செய்வாய். உனது பீடமான பூமியில் நீ எழுந்தருளுமாறு பிரார்த்திக்கிறோம். எங்களுக்கு ஏராளமான செல்வத்தைத் தருவாய்.

ஒன்றாகச் செயல்படுங்கள், ஒன்றாகப் பேசுங்கள், உங்கள் மனங்கள் ஒத்த கருத்துடன் நிலவட்டும். முன்னாளில் தேவர்கள் யாகத்தில் எப்படி தங்கள் பங்கை ஒற்றுமையாக ஏற்றுக் கொண்டார்களோ அப்படியே ஒற்றுமையாக இருங்கள்.

உங்கள் பிரார்த்தனை ஒத்த கருத்துடன் விளங்கட்டும். உங்கள் கூட்டங்களொற்றுமையுடன் நிலவட்டும். உங்கள் எண்ணங்களும் மனமும் ஒற்றுமையாக இருக்கட்டும். உங்களுக்காக பொதுவான பிரார்த்தனையை நான் பிரார்த்திக்கிறேன். உங்களுக்காக பொதுவான ஆஹுதியால் வழிபடுகிறேன்.

உங்கள் சங்கல்பம் ஒன்றுபட்டதாக இருக்கட்டும். உங்கள் உணர்ச்சி ஒன்றுபட்டதாக இருக்கட்டும். உங்கள் சிந்தனை ஒன்று பட்டதாக இருக்கட்டும். இவ்வாறு உங்களிடையே அற்புதமான இயைபு நிலவட்டும்.

******

## நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்

## (அக்ஷீப்யாம் தே ஸுக்தம்)

**“நாம் நோயற்றவர்கள், என் நோய்கள் எல்லாம் விலகிவிட்டன”** என்பதை மீண்டும் மீண்டும் மனத்திற்குச் சொல்வது நோயை விரட்டுவதில் முக்கியப் பங்கு வகிக்கின்றது.

சுவாமி விவேகானந்தர் தமது சகோதரத் துறவியான சுவாமி சாரதானந்தருக்கு இவ்வாறு எழுதுகிறார்.

‘இப்போது உனக்கு ஆச்சரியமானதொரு விஷயத்தைக் கூறுகின்றேன். உங்களுள் யாராவது நோயுற்றிருந்தால், அவரோ அல்லது மற்றவரோ நோயுற்றவரைத் தன் மனத்தில் நினைக்க வேண்டும்.

அவர் நலமாக உள்ளார் என்று மனத்திற்குள் உறுதியாகச் சொல்லவேண்டும். திடமாக பாவனை செய்ய வேண்டும். இதன்மூலம் அவர் விரைவில் குணமடைவார். இதை அவருக்குத் தெரியாமலே நீ செய்யலாம். உங்களுக்கிடையே ஆயிரம் மைல் தூரம் இருந்தாலும் சரி. இதை நினைவில் வைத்துக்கொள். இனிமேல் உடல் நலம் குன்றவிடாதே.

நோயற்ற வாழ்விற்கு ரிக்வேதம் தருகின்ற ஒரு சுயதூண்டுதலே *அக்ஷீப்யாம் தே ஸூக்தம்*.

*ஓம் அக்ஷீப்யாம் தே நாஸிகாப்யாம் கர்ணாப்யாம் சுபுகாததி*
*யக்ஷ்மம் சீர்ஷண்யம் மஸ்திஷ்காத் ஜிஹ்வாயா விவ்ருதாமி தே*

*க்ரீவாப்யஸ்த உஷ்ணிஹாப்ய: கீகஸாப்யோ அனூக்யாத்*
*யக்ஷ்மம் தோஷண்ய (அ)மம்ஸாப்யாம் பாஹுப்யாம் விவ்ருதாமி தே*

*ஆந்த்ரேப்யஸ்தே குதாப்யோ வனிஷ்ட்டோர் ஹ்ருதயாததி*
*யக்ஷ்மம் மதஸ்னாப்யாம் யக்ன: ப்லாசிப்யோ விவ்ருஹாமி தே*

*ஊருப்யாம் தே அஷ்ட்டீவத்ப்யாம் பார்ஷ்ணிப்யாம் ப்ரபதாப்யாம்*
*யக்ஷ்மம் ஸ்ரோணிப்யாம் பாஸதாத்பம்ஸஸோ விவ்ருதாமி தே*

*மேஹனாத்வனம் கரணால்லோம ப்யஸ்தே நகேப்ய:*
*யக்ஷ்மம் ஸர்வஸ்மாதாத்மனஸ்தமிதம் விவ்ருஹாமி தே*

*அங்காதங்கால்லோம்னோ ஜாதம் பர்வணி பர்வணி*
*யக்ஷ்மம் ஸர்வஸ்மாதாத்மனஸ்தமிதம் விவ்ருஹாமி தே*

*ஓம் சாந்தி: ஓம் சாந்தி: ஓம் சாந்தி:*

<u>பொருள்:-</u>

உனது கண்களிலிருந்து, மூக்கிலிருந்து, காதுகளிலிருந்து, கன்னத்திலிருந்து, தலையிலிருந்து, மூளையிலிருந்து, நாக்கிலிருந்து நோய்களை விரட்டுகிறேன்.

உனது கழுத்திலிருந்து, தலையிலிருந்து, எலும்புகளிலிருந்து, மூட்டுகளிலிருந்து, தோள்களிலிருந்து, கைகளிலிருந்து, முன்கைகளிலிருந்து நோய்களை விரட்டுகிறேன்.

உனது குடலிலிருந்து, குதத்திலிருந்து, அடிவயிற்றிலிருந்து, இதயத்திலிருந்து, சிறுநீரகங்களில் இருந்து, கல்லீரலிலிருந்து, வயிற்றிலுள்ள உறுப்புகளிலிருந்து நோய்களை விரட்டுகிறேன்.

உனது தொடைகளிலிருந்து, மூட்டுகளிலிருந்து, குதிகால்களிலிருந்து, அடிக்கால்களிலிருந்து, பின்புறங்களிலிருந்து, உள்ளுறுப்பிலிருந்து நோய்களை விரட்டுகிறேன்.

உனது பிறப்புறுப்பிலிருந்து, சிறுநீர்ப்பையிலிருந்து, முடியிலிருந்து, நகங்களிலிருந்து, உன் உள்ளே உள்ள எல்லா அவயவங்களிலிருந்தும் நோய்களை விரட்டுகிறேன்.

உனது ஒவ்வோர் அங்கங்களிலிருந்தும், ஒவ்வொரு முடியிலிருந்தும், நோய் தோன்றுகின்ற ஒவ்வொரு மூட்டிலிருந்தும், உன் எல்லா அவயவங்களிலிருந்தும் நோய்களை விரட்டுகிறேன்.

## (மேதா ஸூக்தம் - தைத்திரீய ஆரண்யகம் 4.10.41-44)

உள்ளுணர்வை வேண்டிப் பிரார்த்திக்கும் இந்த ஸூக்தம் உள்ளுணர்வை மேதா தேவியாக உருவகிக்கிறது. மேதா தேவியின் ஒளி சூரியகிரணங்கள் போல் எங்கும் வ்யாபித்துள்ளது என்கிறது அதர்வண வேதம்.

கல்வி, விஞ்ஞானம், மதம், ஆன்மீகம் என்று எந்தத் துறையானாலும் இந்த உள்ளுணர்வு விழிக்கப் பெற்றவர்களே படைப்பாளிகளாக இருக்கிறார்கள். பெரிதாக எதையும் சாதிக்க நினைப்பவர்களுக்கு இந்த உள்ளுணர்வின் விழிப்பு, மேதா தேவியின் அருள் மிகவும் இன்றியமையாதது.

*ஓம் யச்சந்தஸாம்ரிஷபோ விச்வரூப:*
*சந்தோப்யோ(அ)த்யம்ருதாத் ஸம்பபூவ*
*ஸ மேந்த்ரோ மேதயா ஸ்ப்ருணோது*
*அம்ருதஸ்ய தேவ தாரணோ பூயாஸம்*
*சரீரம் மே விசர்ஷணம்*
*ஜிஹ்வா மே மதுமத்தமா*
*கர்ணாப்யாம் பூரி விச்ருவம்*
*ப்ரஹ்மண:கோசோ(அ)ஸி மேதயா பிஹித:*
*ச்ருதம் மே கோபாய*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

## <u>பொருள்:-</u>

எந்த நாதம் வேதங்களின் மிகச் சிறந்த பகுதியோ,
எல்லாமாக இருக்கிறதோ, அழிவற்றதான
வேதங்களிலிருந்து தோன்றியதோ, அந்த ஓங்காரம்
எனக்கு அறிவொளியைத் தரட்டும். தேவனே, நான்
அழிவற்ற பரம்பொருளைப் பற்றிய அறிவைப்
பெறுவேனாக. எனது உடல் ஆரோக்கியம்
உடையதாக இருக்கட்டும். எனது நாக்கு மிகவும்
இனிமையானவற்றைப் பேசட்டும்,
காதுகள் ஏராளமாக நல்லவற்றைக் கேட்கட்டும்.
ஓங்காரப் பரம்பொருளே,
உலகப் பொருட்களைப் பற்றிய அறிவால் நீ
மறைக்கப் பட்டுள்ளாய்.
இறைவனின் இருப்பிடம் நீ, கற்றவற்றை நான்
மறந்துவிடாமல் காப்பாய்.

******

ஓம்

மேதா தேவீ ஜுஷமாணா ந ஆகாத்
விச்வாசீ பத்ரா ஸுமனஸ்யமானா த்வயா
ஜுஷ்ட்டா நுதமானா துருக்தான்
ப்ருஹத்வதேம விததே ஸுவீரா: 1

த்வயா ஜுஷ்ட்ட ரிஷிர்பவதி தேவி
த்வயா ப்ரஹ்மா (அ) கத ஸ்ரீருத த்வயா
த்வயா ஜுஷ்ட்டச் சித்ரம் விந்ததே வஸு ஸா
ஜுஷஸ்வ த்ரவிணேன மேதே 2

மேதாம் ம இந்த்ரோ ததாது
மேதாம் தேவீ ஸரஸ்வதீ
மேதாம் மே அச்வினாவு
பாவாதத்தாம் புஷ்கர ஸ்ரஜௌ 3

அப்ஸராஸு ச யே மேதா
கந்தர்வேஷு ச யன்மன:
தைவீம் மேதா ஸரஸ்வதீ ஸா மாம்
மேதா ஸுரபிர் ஜுஷதாக்ம் ஸ்வாஹா 4

ஆ மாம் மேதா ஸுரபிர்விச்வரூபா
ஹிரண்ய வர்ணா ஜகதீ ஜகம்யா
ஊர்ஜஸ்வதீ பயஸா பின்வமானா ஸா மாம்
மேதா ஸுப்ரதீகா ஜுஷந்தாம் 5

*மயி மேதாம் மயி ப்ரஜாம் மய்யக்னிஸ்தேஜோ ததாது*
*மயி மேதாம் மயி ப்ரஜாம் மயீந்த்ர இந்த்ரியம் ததாது*
*மயி மேதாம் மயி ப்ரஜாம் மயி*
*ஸூர்யோ ப்ராஜோ ததாது 6*

*ஓம் ஹம்ஸ ஹம்ஸாய வித்மஹே*
*பரமஹம்ஸாய தீமஹி*
*தன்னோ ஹம்ஸ: ப்ரசோதயாத்.*

*ஓம் யச்சந்தஸாம்ரிஷபோ ...*
*ச்ருதம் மே கோபாய*

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

<u>பொருள்:-</u>

எங்கும் நிறைந்தவளும், மங்கலத்தைத் தருபவளும், நன்மை செய்பவளும், நம்மிடம் மகிழ்ச்சி கொண்டவளும், அறிவின் தேவியும் ஆகிய கலைமகள் நம்மிடம் வருவாளாக!

தேவீ, நீ வருமுன்பு பயனற்ற பேச்சுக்களில் மகிழ்ந்திருந்த நாங்கள் உனது ஆசிகளால் நல்லறிவு பெற்று, வீரம் நிறைந்த மக்களுடனும் சீடர்களுடனும் மேலான உண்மைகளைப் பேசும் திறன் பெற்றோம். 1

தேவீ, உன் அருள் பெற்றவன் ரிஷி ஆகிறான்; ப்ரம்ம ஞானியாகிறான்; செல்வம் பெறுகிறான்; சிறந்த பல்வேறு ஐசுவரியங்களை அடிக்கிறான். அத்தகைய கலைமகளே, எங்களுக்குச் செல்வங்களை அருள்வாய். 2

இந்திரன் எனக்கு உள்ளுணர்வைத் தரட்டும். சரஸ்வதி தேவி எனக்கு புத்தியை அருளட்டும். தாமரை மாலைகள் அணிந்த அச்வினி குமாரர்கள் இருவரும் எனக்கு புத்தியைத் தரட்டும். 3

எந்த உள்ளுணர்வு அப்சரப் பெண்களிடம் உள்ளதோ, எந்த மன ஆற்றல் கந்தர்வர்களிடம் உள்ளதோ, எந்த உள்ளுணர்வு தெய்வீக வேத ஞானமாக வெளிப்பட்டுள்ளதோ, நறுமணம் போல் பரவுகிறதோ, அந்த உள்ளுணர்வு என்னில் அருளை நிறைக்கட்டும். 4

உள்ளுணர்வைத் தருபவளும், நறுமணம் போல் என்றும் பரவுபவளும், அனைத்தையும் சோதித்தறிய வல்லவளும், பொன்னிற எழுத்துக்களை

உடையவளும், என்றென்றும் நிலைத்தவளும், உயர் உண்மைகளைத் தேடுபவர்கள் தொடர்ந்து நாடத் தக்கவளும், வலிமையின் இருப்பிட மானவளும், பால் முதலிய செல்வத்தால் என்னை வளர்ப்பவளுமான மேதாதேவி மலர்ந்த முகத்துடன் வந்து எனக்கு நன்மை செய்யட்டும். 5

உள்ளுணர்வு, மக்கட்செல்வம், வேதங்களைப் படிப்பதால் வரும் தேஜஸ், இவற்றை எனக்கு அக்கினி தேவன் தரட்டும். உள்ளுணர்வு, மக்கட்செல்வம், புலனடக்கத்தால் வருகின்ற வலிமை இவற்றை எனக்கு இந்திரன் தரட்டும். உள்ளுணர்வு, மக்கட்செல்வம், எதிரிகளின் மனத்தில் பயத்தை உண்டாக்குகின்ற வலிமை இவற்றை எனக்கு சூரிய தேவன் தரட்டும். 6

ஆன்மாவை அறிந்து கொள்வோம், அதற்காக பரம்பொருளை தியானிப்போம். அந்தப் பரம்பொருள் நம்மைத் தூண்டுவாராக!

******

(ஸ்ரத்தா ஸூக்தம் - ரிக் வேதம் 10.151)

சிரத்தை என்றால் செயல்பாட்டுடன் கூடிய நம்பிக்கை. அந்த நம்பிக்கையைச் செயல்படுத்துவது, அந்த நம்பிக்கையின் லட்சியத்தை அடையப் பாடுபடுவது இதுவே சிரத்தை.

அத்தகைய சிரத்தையைப் போற்றுவதாகவும் அது நம்மிடம் வருமாறு பிரார்த்திப்பதாகவும் அமைந்துள்ளது இந்த ஸூக்தம்.

*ஓம்*

*ச்ரத்தயாக்னி ஸமித்யதே ச்ரத்தயா ஹூயதே ஹவி:*
*ச்ரத்தாம் பகஸ்ய மூர்தனி வசஸா வேதயாமஸி 1*

*ப்ரியம் ச்ரத்தே ததத: ப்ரியம் ச்ரத்தே திதாஸத:*
*ப்ரியம் போஜேஷு யஜ்வஸ்விதம் ம உதிதம் க்ருதி 2*

*யதா தேவா அஸுரேஷு ச்ரத்தாமுக்ரேஷு சக்ரிரே*
*ஏவம் போஜேஷு யஜ்வஸ்வஸ்மாகமுதிதம் க்ருதி 3*

*ச்ரத்தாம் தேவா யஜமானா வாயுகோபா உபாஸதே*
*ச்ரத்தாம் ஹ்ருதய்ய யாகூத்யா ச்ரத்தயா விந்ததே*
*வஸு 4*

*ச்ரத்தாம் ப்ராதர் ஹவாமஹே ச்ரத்தாம் மத்யந்தினம் பரி*
*ச்ரத்தாம் ஸூர்யஸ்ய நிம்னுசி ச்ரத்தே ச்ரத்தாபயேஹ ந:   5*

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

## <u>பொருள்:-</u>

வேள்வித்தீ சிரத்தையால் வளர்க்கப்படுகிறது. ஆஹுதி சிரத்தையால் அளிக்கப்படுகிறது. இறைவனின் தலையில் இருக்கின்ற சிரத்தையைப் பாடல்களால் போற்றுகிறோம். 1

ஓ சிரத்தையே, கொடுப்பவரின் விருப்பத்தை நிறைவேற்று. கொடுக்க நினைப்பவரின் விருப்பத்தை நிறைவேற்று. வேள்வி செய்பவர்களின் விருப்பங்களை நான் சொன்னதுபோல் செய்து நிறைவேற்று.   2

பயங்கரமான அசுரர்களுடன் நடந்த போரில் தேவர்கள் எப்படி சிரத்தையைக் கைக்கொண்டு போரிட்டார்களோ அதுபோல், வேள்வி செய்பவர்களின் ஆசைகளை எங்களிடம்

தோன்றுகின்ற எண்ணங்கள் போல் நிறைவேற்றுவாய். 3

தேவர்கள், மனிதர்கள், வாயுகோபர்கள் (வாயுவால் காப்பாற்றப்படுபவர்கள்) எல்லாரும் சிரத்தையை வழிபடுகிறார்கள். இதய தாகத்தின் வாயிலாகவே சிரத்தை அடையப்படுகிறது. சிரத்தையால் செல்வம் பெறப்படுகிறது. 4

சிரத்தையைக் காலையில் வழிபடுவோம். நண்பகலில் வழிபடுவோம். சூரியன் கீழே இறங்கி மறையும்போது வழிபடுவோம். சிரத்தையே எங்களுக்கு சிரத்தையைத் தருவாய். 5

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

******

**(சங்கல்ப ஸூக்தம் - சுக்லயஜுர்வேதம் வாஜஸனேயி ஸம்ஹிதை 34.1-6)**

அன்றாட வாழ்க்கையில் நாம் செய்கின்ற தவறுகளும் சந்திக்கின்ற தோல்விகளும் ஏராளம்.

இதற்குப் பொதுவாக மூன்று காரணங்கள் உண்டு.

1. தன்னறிவு (self awareness) இன்றிச் செய்வது.

2. ஒரு லட்சியமின்றி ஏனோதானோ என்று செய்வது.

3. திடசங்கல்பம் இல்லாமல் செய்வது.

திடசங்கல்பமின்மையே மற்ற இரண்டிற்கும் அடிப்படை.

திட சங்கல்பத்தை நம்மில் உருவாக்க, சமய சம்பந்தமான சடங்குகளைத் தொடங்கும் முன், வீடு, அலுவலகம், தொழிற்சாலை, ஆஸ்பத்திரி எங்கானாலும், எந்த நற்பணியும் தொடங்கும் முன்னும் இந்த ஸுக்தத்தை ஓதலாம்.

தூங்கு முன்னும் தூங்கியெழுந்த பின்னும் இதனை ஓதலாம். இறைவனிடம் ஒரு பிரார்த்தனையாகவோ, தனக்குத்தானே சுய தூண்டுதலாகவோ (auto suggestion) இதை ஓதலாம்.

*ஓம்*

*யஜ்ஜாக்ரதோ தூரமுதைதி தைவம்*
*தது ஸுப்தஸ்ய ததைவேதி*
*தூரம்கமம் ஜ்யோதிஷாம் ஜ்யோதிரேகம்*
*தன்மே மன:சிவஸங்கல்பமஸ்து 1*

*யேன கர்மாண்யபஸோ மனீஷிணோ*
*யஜ்ஞே க்ருண்வந்தி விததேஷு தீரா:*
*யதபூர்வம் யக்ஷமந்த: ப்ரஜானாம்*
*தன்மே மன: சிவஸங்கல்பமஸ்து 2*
*யத் ப்ரஜ்ஞானமுத சேதோ த்ருதிச்ச*
*யஜ்ஜ்யோதிரந்தரம்ருதம் ப்ரஜாஸு*
*யஸ்மான்ன ரிதே கிஞ்ச ந கர்ம க்ரியதே தன்மே*
*மன: சிவஸங்கல்பமஸ்து 3*

*யேனேதம் பூதம் புவனம் பவிஷ்யத்*
*பரிக்ருஹீதமம்ருதேன ஸர்வம்*
*யேன யஜ்ஞஸ்தாயதே ஸப்தஹோதா தன்மே*
*மன: சிவஸங்கல்பமஸ்து 4*

*யஸ்மின் ரிச: ஸாம யஜூஂக்ம்ஷி யஸ்மின்*
*ப்ரதிஷ்ட்டிதா ரதநாபாவிவாரா:*
*யஸ்மின்ச்சித்தக்ம் ஸர்வமோதம் ப்ரஜானாம் தன்மே*
*மன: சிவஸங்கல்பமஸ்து 5*

*சுஷாரதிரச்வானிவ யன்மனுஷ்யான்*
*நேனீயதே(அ)பீசுபிர்வாஜின இவ*
*ஹ்ருத்ப்ரதிஷ்ட்டம் யதஜிரம் ஜவிஷ்ட்டம் தன்மே*
*மன: சிவஸங்கல்பமஸ்து 6*

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

## <u>பொருள்:-</u>

ஒளிப்பொருளான எந்த ஆன்மா விழிப்பு நிலையில் வெளியே செல்கிறதோ, அதுவே தூக்கத்தில் அப்படியே அகமுகமாகச் செல்கிறது.

தொலைதூரங்களை எட்டுவதும், ஒளிக்கெல்லாம் ஒளியாய் இருப்பதும், ஒன்றெயானதுமான அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும். 1

அறிஞர்கள் வேள்விகளில் அபஸ் போன்ற கர்மங்களை எதனால் செய்கிறார்களோ, அறிவாளிகளின் பிரார்த்தனைகளில் எது முதன்மையானதோ, எது போற்றத் தக்கதோ, எது உயிர்களின் உள்ளே உறைகிறதோ அந்த ஆன்மா எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும். 2

எந்த ஆன்மா தன்னறிவு, ஞாபகசக்தி, மன உறுதி, ஆகியவற்றின் பிறப்பிடமோ, எந்த ஆன்மா உயிர்களில் அழிவற்ற ஒளியாக உள்ளதோ, எது இல்லாமல் எந்த வேலையும் செய்ய முடியாதோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும். 3

கழிந்தது, இருப்பது, வரப்போவது எல்லாம் எந்த அழிவற்ற ஆன்மாவால் அறியப்படுகிறதோ, வேள்வி செய்கிற எழுவரும் எதனால் வேள்வி பற்றி விரித்துரைக்கிறார்களோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும். 4

ஆரங்கள் தேர்ச்சக்கரத்தின் அச்சில் நிலைபெற்றிருப்பது போல், ரிக் சாம யஜுர் வேதங்கள் எதில் நிலைபெற்றுள்ளனவோ, மக்களின் மனம் எல்லாம் எதில் ஊடும்பாவும் போல்

நிலைபெற்றுள்ளதோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும். 5

நல்ல சாரதி குதிரைகளைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பது போல், மனிதர்கள் கடிவாளத்தால் குதிரையை வழிநடத்துவதுபோல், எந்த ஆன்மா இதயத்தில் நிலைபெற்றிருந்து மனிதர்களை வழி நடத்துகிறதோ, எந்த ஆன்மா என்றும் இளமையானதோ, அனைத்திலும் வேகமானதோ அந்த ஆன்மா, எனது மனம் நல்ல சங்கல்பத்தைச் செய்யுமாறு தூண்டட்டும். 6

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:*

***ஓம் தத் சத்!***

# சாந்தி மந்திரங்கள்



தொகுப்பு

சுவாமி பிரபஞ்சநாதன்